# வண்டிக்காரச் செல்லமுத்து

வ.ரா.

இது மோட்டார் யுகம்; ஏரோப்ளேன் காலம். காலத்துக்குத் தக்கபடி பேச வேண்டும் என்கிறார் எங்கள் ஊர் கூனல் தாத்தா. காலத்துக்குத் தக்க மனிதர்களோடு காலத்துக்குத் தக்க பேச்சுப் பேசுவதா யிருந்தால், கூனல் தாத்தாவோடு யார் பேசுவார்கள்? என்ன பேச முடியும்?

கூனல் தாத்தா சொல்லுகிறபடி கேட்டால், எங்கள் அருமைச் செல்லமுத்துவை நாம் எல்லோரும் மறந்துவிட நேரிடும். நாம் செல்லமுத்துவை மறந்தால், கோடி வீட்டுப் பாட்டி சொல்லுவது போல, நமக்கு ஏழேழ் ஜன்மத்துக்கும் சோறு கிடைக்காது.

பாட்டி சொல்லுவதற்குத் தப்பர்த்தம் செய்து கொண்டு செல்லமுத்துவைச் சமையற்காரனாகச் செய்துவிட வேண்டாம். செல்லமுத்து வண்டிக்கார - ன் - ர். எந்த எழுத்துப் போடுவது என்று தெரியவில்லை. தங்கமான செல்ல முத்துவுக்குப் பாவனை - மரியாதை கொடுத்து அன்பைத் தொலைத்துக் கொள்ள வேண்டுமா? செல்லமுத்து வண்டிக்காரன்தான். அப்புறம் உங்களால் என்ன செய்ய முடியும்? (உங்களால் முடிந்ததை, மான நஷ்ட தாவா நோட்டீஸ் மூலமாய் மட்டும் அனுப்பிவிட வேண்டாம்.)

உங்களால் முடிந்ததை, கடைசியில் சொன்ன மாதிரிச் செய்து விட்டீர்களானால், செல்லமுத்து தனக்காகவும் எனக்காகவும் சேர்த்துச் சிரிப்பான். அதுவும் அவன் விகடப் பத்திரிகையின் ஆசிரியரைக் காட்டிலும் விழுந்து விழுந்து சிரிப்பான். செல்ல முத்துவுக்குப் பேச்சின் உயிர்நாடி தெரியும். பேச்சின் வடிவத்தை, பேச்சின் உருவத்தைக் கண்டு, அவன் ஏமாந்து போகிறவனில்லை.

'கொம்பால் குருணிப் பால் கறந்தாலும் கூரை பிடுங்குகிற மாடு உதவாது!' என்று செல்லமுத்து அடிக்கடி சொல்லுவான். உயிரின் இலட்சணமான சித்திரம் அவன் கண்ணிலும் உள்ளத்திலும் எவ்வளவு அழகாகப் பதிந்திருக்கிறது என்று தெரியவில்லையா? இந்த உண்மையைத் தெளிவாகக் கண்ட செல்லமுத்து, ஸ்லேட்டு புஸ்தகங்களைத் தூக்கிக் கொண்டு, பள்ளிக்கூடத்துக்குப் போய்,

வாத்தியார் கையால் பிரப்பம் பழம் வாங்கி, கல்வி கற்றுக் கொள்ள வேண்டுமென்பதுண்டா?

செல்லமுத்து வண்டிக்காரன் என்ற முழுப் பட்டம் பெறு வதற்கு முன், எத்தனையோ தடவைகள் எங்கள் வீட்டுக் குழந்தை களைப் பள்ளிக்கூடத்துக்கு அழைத்துக் கொண்டு போய் விட்டிருக் கிறான். 'பள்ளிக்கூடத்துக்கு நம்ம வீட்டுப் பிள்ளைளை அனுப்பப் படாதுங்க. அந்த வாத்தியார் கொன்னு தீர்த்து விடுறாரு பிள்ளிங்களை!' என்று அலுத்துக் கொண்டு சொல்வான்.

'நம்ம வீட்டுப் பிள்ளைகளும் உன்னைப் போல, வளர வேண்டுமென்பது உன் கருத்தா?' என்று கேட்டால், 'நான் என்ன கெட்டுப் போயிட்டேன்? என்னால் என்ன செய்ய முடியாது? படிச்சுப் படிச்சுக் கண்ணைக் கெடுத்துக் கொண்டு விட்டேனா? கண் பார்த்தது கை செய்யும்!' என்பான். 'கண் பார்த்தது கை செய்யும்!' என்ற பழமொழிக்கு, கண் கெடாமலிருந்தால் அது பார்த்ததைக் கை செய்யும் என்று தனி அர்த்தம் கற்பித்த செல்லமுத்துவைப் பற்றி இப்பொழுது என்ன நினைக்கிறீர்கள்? கண்ணால் பார்ப்பது வித்தை; கை செய்வது கல்விப் பயிற்சி. செல்லமுத்து மேதாவி என்பதில் சந்தேகமில்லை.

செல்லமுத்து நல்ல வாட்டசாட்டமான பேர்வழி. ஐந்தே முக்கால் அடி உயரம். அதிகக் கனமுமில்லை. மெலிந்தவனுமில்லை. இடை நெருக்கமாயும், மார்பு விரிந்தும் இருக்கும். அதிகப்படியான சதையை உடலின் எந்தப் பாகத்திலும் காண முடியாது. சொர சொரப்பான கைகளை, சூம்பிப்போன விரல்களை அவனிடம் காணமுடியாது. கைகளை விரித்தால், பலகையைப் போல இருக்கும். அவனுடைய மார்பிலே வண்டியை விட்டுக்கூட ஓட்டலாம். ஆனால் மூட்டை தூக்கி மூட்டை தூக்கி, முதுகுபட்டை வாங்கிப் போயிருக்கும். தலையுச்சியில் மயிர் நீண்டிராது. அடிக்கடி எண்ணெய் காணாத தலையல்லவா? மேலும், தினந்தோறும் நூற்றுக் கணக்கில் மூட்டைகள் கண்டது அந்தத் தலை.

இப்பேர்ப்பட்ட உடம்பை வைத்துக் கொண்டு, வீசையை முறுக்கி, தெம்மாங்கு பாடினால், 'செல்லமுத்து, இன்னொரு தரம் பாடு!' என்று பையன்களெல்லோரும் அவனை வளைத்துக் கொள்ளுவார்கள்.

'ஆல மரத்துக் கிளி
ஆசாரம் பேசுங் கிளி
நான் வளத்த பச்சைக் கிளி
நாளை வரும் கச்சேரிக்கு'

என்று அவன் பாடினால், பையன்கள் எல்லோரும் சொக்கி விடுவார்கள். 'கச்சேரிக்கு வருமா?' என்று ஒரு பையன் கேட்பான். 'கட்டாயம் வரும்!' என்று அந்தக் குழந்தையிடம் கொஞ்சுவான்.

'ஏ! செல்லமுத்து! 'சாலையிலே இரண்டு மரம்' பாடு!' என்று சிறு பெண்கள் கேட்பார்கள். செல்லமுத்துவினிடம் அவர்களுக்கு அவ்வளவு சொந்தம். அவன் பாடுகிறதைக் கேளுங்கள்.

'சாலையிலே ரண்டு மரம்

சர்க்காரு வச்ச மரம்

ஓங்கி வளந்த மரம்

உனக்கேத்த தூக்கு மரம்'

கடைசி அடியைப் பாடும்பொழுது அவனுக்கு வரும் உற்சாகமும், குழந்தைகளுக்கு இருக்கிற உற்சாகமும், ரொம்ப ஜாஸ்தியாயிருக்கும். தூக்கு மரத்தைக் கண்டு, குழந்தைகள் ஏன் இவ்வளவு ஆசைப்பட வேண்டும் என்பது செல்லமுத்துவுக்கே சந்தேகம்.

'தன்னைப் போல் மன்னுயிரையும் காத்தல்' என்பது மன்னர் களின் கடமை என்கிறார்கள். செல்லமுத்து தன் வசம் இருக்கும் மாடுகளை எப்படிப் பாவித்துப் போஷிக்கிறான் என்பதை நேரில் பார்த்தால்தான் தெரியும். மாடுகளின் பேரில் ஒரு தூசியும் தரித் திருக்க அவன் பார்க்கமாட்டான். அந்தி சந்தி இரண்டு வேளை களிலும் அவன் மாடுகளைத் தேய்க்கும் விதரணையைப் பார்க்க வேண்டுமே! கண்டபடி முரட்டுத்தனமாய்த் தேய்ப்பானா? எந்த இடத்தில் எப்படித் தேய்க்கிறது என்பது அவனுக்குத் தெரியும். எந்த இடத்தில் தேய்க்க வேண்டும் என்று மாடு இடத்தைக் காட்டுவது போல, அடையாளமாக நிற்கும்.

அவன் வண்டி ஓட்டுகிற சாமர்த்தியமே சாமர்த்தியம். கை விரலால் கூட மாட்டைத் தொட மாட்டான். தார்க்குச்சி மரியாதைக் காகக் கூண்டில் சொருகிக் கிடக்கும். 'வண்டிக்காரன் நொண்டி, வண்டி மாடு சண்டி, போ ராஜா போ! ஓடு அம்மா ஓடு!' என்று ஏதோ குரலில் சொல்லுவான். மாடுகள் தாமாக ஓட்டம் பிடிக்கும். தானும் தார் குத்த மாட்டான், பிறரையும் குத்தவிட மாட்டான்.

ஒரு நாள் மாடு தீனி எடுக்கவில்லை யென்றால், செல்ல முத்துவுக்குச் சோற்று வாயிலே மண்தான். அவன் சாப்பிடச் சம்மதிப்பதே இல்லை. மாட்டைத் தொட்டுத் தொட்டுப் பார்ப்பான். தடவிக் கொடுப்பான். கெட்ட வியர்வை வருகிறதோ

என்று உடம்பை மோந்து பார்ப்பான். நாக்கைச் சோதித்துப் பார்ப்பான். மாட்டைக் கொஞ்ச தூரம் வரையில் நடத்திப் பார்ப்பான். இவ்வளவும் போதாது என்று வழியிலே போகிறவர்களைக் கூப்பிட்டு, 'அண்ணே! இந்த மாட்டைப் பாருங்க!' என்பான். செல்லமுத்துவினிடம் வேலை செய்யும் மாடுகள் அவனிடம் செல்லம் கொஞ்சும்.

அழுகிற குழந்தைகளின் அழுகையைத் தணிய வைப்பதில் செல்லமுத்துவுக்குச் சமானமாய்ப், பெற்ற தாய்கூட இருக்க மாட்டாள். கையை ஆட்டுவான்; கும்மி யடிப்பான்; குதிப்பான்; கோணலாய்ப் பார்ப்பான்; உடம்பை இந்தப் பக்கமும் அந்தப் பக்கமும் கோணிக் கொண்டு 'கொறளி' வித்தை செய்வான்; ஒன்றுக்கும் மசியாமல் போனால், வாய் விட்டுப் பாடுவான். அதற்கும் பலிக்காமல் போனால் தோளிலே சுமந்து தட்டிக் கொடுத்துக் கொண்டு நெடுந் தூரம் செல்லுவான். இதிலும் காரியம் சாத்தியப் படாமற் போனால் அவன் என்ன செய்வானோ, அது தெரியாது - குழந்தை அழுவதில்லை.

வண்டியில் தூரப் பிரயாணம் செய்ய நேர்ந்தால் அவன் இரவில்தான் போவான். 'இப்படி இருட்டில் போகலாமா?' என்றால், 'கையும் கட்டாரித் தடியும் எதற்கு இருக்கின்றன?' என்று சற்று மீசையை முறுக்குவான். 'பேய் பிசாசுகள் வழியில் இருந்தால்.....?' என்று வயது சென்ற கிழவிகள் கேட்டால், 'நான்தான் பெரிய பேய். வழியில் அகப்படுகிற பேயைப் பிடித்துப் பலகாரம் செய்துவிட மாட்டேனா?' என்று ஜோராய்ப் பேசுவான்.

இவ்வளவு உற்சாகமுள்ள செல்லமுத்துவுக்கு ஒரே ஒரு மனக் குறை. அதை அவன் எல்லாரிடமும் சொல்லிக் கொள்ளுகிறான். 'நானும் ஒரு வண்டி ஓட்டுகிறேன். ரயிலையும் ஒருத்தன் ஓட்டு கிறான். மோட்டார் காரையும் ஒருத்தன் ஓட்டுகிறான். நான் மட்டும் வண்டிக்காரன். அவர்கள் எல்லோரும் "ட்ரைவர் அய்யா"க்களோ? இது என்ன நியாயத்தில் சேர்ந்தது? என்னை "ட்ரைவர் அய்யா" என்று கூப்பிடுகிறது; அல்லது அவர்களையும் "வண்டிக்காரன்" என்று கூப்பிடுகிறதுதானே!' என்று அடிக்கடி சொல்லுவான். என்னமோ அவன் நியாயம் கேட்கிறான். பட்சபாத மில்லாமல் தீர்ப்புச் செய்யுங்கள். ரொம்ப மானி. ரொம்ப ரோஷக்காரன்.

-1933